# பகவத் பாதை

**BAGAVATH PATHAI**

• Volume : 1 • Issue : 12
• மலர்:1 • இதழ்:12

தமிழ் மாத இதழ்

• February 2015 • Annual Subscription Rs. 100/-
• பிப்ரவரி 2015 • வருடச் சந்தா ரூ.100/-

## செயல்களின் வெற்றி



மன ஈடுபாட்டுடன் நாம் எதனைச் செய்தாலும் அதுதான் யோகா, அது தான் தியானம். நாம் தியானத்துடன் செய்யும் செயல்கள் மட்டுமே வெற்றி பெறும். செயல்களை தூண்டாத கற்பிதங்கள் அனைத்தும் பகற்கனவே, பலன் இல்லாதவையே.

– ஸ்ரீ பகவத்



'இரகசியம் – **Secret**' எனும் தலைப்பில் நூல் ஒன்று உள்ளதாகவும், அதில் நம் மனதின் ஈர்ப்பு சக்தி விவரிக்கப்பட்டுள்ளதாகவும் கூறப்படுகிறது.

அந்த நூலைப் படித்த பலர் நம்முடன் அது பற்றிய கருத்துக்களைப் பகிர்ந்து கொண்டுள்ளார்கள்.

அவர்கள் என்ன கூறுகிறார்கள்?

உங்களுடைய மனம், இந்த பிரபஞ்ச மனதின் ஒரு பகுதியே, இரண்டும் தொடர்புடனேயே இருந்து வருகின்றன.

அந்த பிரபஞ்ச மனதினுள் நமக்கு வேண்டிய அனைத்தும் கொட்டிக் கிடக்கின்றன. அவை எவருக்கோ சொந்தமானவை அல்ல; அவை அனைத்துமே நமக்குச் சொந்தமானவையே. அவற்றுள் எதனை வேண்டுமானாலும் நாம் நமக்கென எடுத்துக் கொள்ளலாம்.

உங்களுக்கு என்ன வேண்டுமானாலும் சரி; கேளுங்கள் அவை உங்களுக்கு கிடைத்து விடும்.

பணம் வேண்டுமா? பதவி வேண்டுமா? புகழ் வேண்டுமா? வெற்றி வேண்டுமா? ஆரோக்கியம் வேண்டுமா?

–நீங்கள் எதனை கேட்கிறீர்களோ அது உங்களுக்குக் கிடைத்து விடும்.

அதனை எப்படி நாம் கேட்க வேண்டும்?

உதாரணத்திற்கு நமக்கு பணத்தேவை அதிகமாக உள்ளது. நாம் பலரிடம் கடன் வாங்கி உள்ளோம். நமது தொழிலை அபிவிருத்தி செய்யவேண்டியுள்ளது. இவற்றுக்கெல்லாம் நமக்கு அதிகமான பணம் தேவைப்படுகிறது.

அவ்வளவு பணம் நமக்கு கிடைப்பதற்கு சாத்தியமே இல்லை. ஆனாலும் கூட நமக்கு தேவையான பணத்தை நாம் அந்த பிரபஞ்ச சக்தியிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம். எப்படி அதனைக் கேட்பது?

"எனக்கு தேவையான பணத்தைத் தயவு செய்து எனக்குக் கொடுப்பீராக" –என்று பிரார்த்தித்துக் கொள்ள வேண்டுமா?

நாம் நோயோடு இருக்கிறோம், "நோயிலிருந்து தயவு செய்து என்னை விடுவித்து அருள்வீராக" – என்று அந்த பிரபஞ்ச சக்தியிடம் பிராத்தனை செய்ய வேண்டுமா?

அவர்கள் இந்த மாதிரி ஒரு வழிமுறையைக் கூறவில்லை. அவர்கள் வேறு ஒரு வகையான வழிமுறையை கூறுகிறார்கள். அப்படி என்ன வழிமுறையைக் கூறுகிறார்கள்?

நமக்கு எது தேவையோ அது நமக்குக் கிடைத்து விட்டதாகக் கற்பனை செய்யச் சொல்லுகிறார்கள்.

நமக்கு தேவையான பணம் நமக்கு கிடைத்து விட்டதாகவும், நமது கடன்களையெல்லாம் அடைத்து விட்டதாகவும், நல்ல முதலீட்டில் நல்லதொரு தொழில் ஆரம்பித்து விட்டதாகவும் கற்பிதம் செய்யச் சொல்கிறார்கள்.

நோயிலிருந்து விடுபட்டு விட்டதாகவும் கற்பிதம் செய்திடச் சொல்கிறார்கள்.

இதன் மூலம் நமக்குத் தேவையான அனைத்தும் நமக்குக் கிடைத்து விடுவதாகக் கூறுகிறார்கள்.

இது உண்மையா? இது சாத்தியமா?

**அ**வன் ஒரு கண்ணாடி ஜாடி விற்பனையாளர், அவன் அழகிய வேலைப்பாடுள்ள சில கண்ணாடி ஜாடிகளை வெளிநாட்டிலிருந்து வரவழைத்திருந்தான். அரிதான அந்த ஜாடிகளை மறுநாள் மன்னரிடம் கொண்டு சென்று விற்கலாம் என முடிவு செய்திருந்தான். அரசரும் அவனை மறுநாள் அரசவைக்கு வருமாறு அழைத்திருந்தார்.

அரசரிடம் என்ன விலை சொல்வது என்பது பற்றி இவன் தனது வீட்டுச் சுவரில்

சாய்ந்து உட்கார்ந்து கொண்டு சிந்திக்க ஆரம்பித்தான்.

அரசவைக்குச் செல்வதாகக் கற்பனை செய்ய ஆரம்பித்தான்.

அவனுடைய ஜாடிகளைப் பார்த்து அரசவையிலுள்ள அனைவரும் வியந்தார்கள். அரசனும் வியந்தான். இந்த ஜாடிகளுக்காக நீ எதைக் கேட்டாலும் தருகிறேன் என்று அரசன் கூறுகிறான். அந்த வியாபாரியும் தயங்காமல் உனது மகளை திருமணம் செய்து கொடு என்று கேட்டான்.

அரசனும் உடன்பட்டு அரச குமாரியை அவனுக்குத் திருமணம் செய்து கொடுத்தான். அவனுடன் வாழ்ந்த அரசகுமாரியும் கற்பம் அடைந்தாள். கற்பமடைந்த அரசகுமாரி தனது தாயைப் பார்க்க வேண்டுமென்று வியாபாரியிடம் வேண்டினாள். கூடாது என வியாபாரி மறுத்தான்.

அவளை அனுப்பி வைக்குமாறு அவள் வியாபாரியின் காலைப் பிடித்து கெஞ்சினாள். வியாபாரிக்கு கோபம் வந்து விட்டது.

“அரசகுமாரி என்ற ஆணவமா உனக்கு? இப்படி அடம் பிடித்தால் அனுப்புவேன் என்று நினைக்கிறாயா?” -என்று கூறி, அந்த வியாபாரி தனது காலினால் அவளை ஓங்கி மிதித்துத் தள்ளினான்.

- இவையெல்லாம் அவனுடைய கற்பனையில் நிகழ்ந்த நினைவுகளே.

ஆனால் கடைசி சம்பவம் மட்டும் உண்மையிலேயே நடந்து விட்டது.

அவன் அரசகுமாரியை எட்டி உதைப்பதாக எண்ணிக் கொண்டு பக்கத்திலிருந்த கண்ணாடி ஜாடிகளின் கூடையை உதைத்து விட்டான்.

ஜாடிகள் அனைத்தும் சுவரிலும், தரையிலுமாக மோதி உடைந்து சிதறி விட்டன.

நடக்காத ஒன்றை நடந்து விட்டதாகக் கற்பனை செய்தால் இப்படி தான் ஆகிவிடும் என்று எதிர்வாதம் செய்யப்போகிறோமா?

அப்படி நாம் எதிர்வாதம் செய்யப் போவதில்லை. ஏனெனில் அத்தகைய கருத்துக்கள் மூலம் பலர் பலன் பெற்றுள்ளார்கள். அவர்கள் பெற்றிருந்த பலன் பொய்யானது அல்ல.

பலர் பயன்பெற்றுள்ளார்கள் என்ற ஒரே காரணத்திற்காக, அதனை முழுமையான உண்மை என்றும் ஏற்றுக் கொள்ள முடியாது.

ஆகவே அவர்களது கூற்று எந்த அளவுக்கு உண்மையானது என்பதை மட்டும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்வோம்.

என்ன நடக்குமோ, ஏது நடக்குமோ, இப்படி நடந்து விடுமோ, அப்படி நடந்து விடுமோ - என்ற பதட்டத்துடன் ஒருவர் இருக்கிறார் என வைத்துக்கொள்வோம். இப்போது அவருக்கு என்ன நிகழ்கின்றது?

இத்தகைய பதட்டத்தின் காரணமாக அவருக்குக் தேவையற்ற இரசாயனங்கள் சுரந்து விடுகின்றன. இதனால் அவரது உடல் நலமும் பாதிக்கப்பட்டு விடுகிறது.

எல்லாமே அவர் விரும்பியபடி நடப்பதாக அவர் காணத் துவங்கும் போது அவரது மன உணர்ச்சிகள் சமன்பாட்டுக்கு வந்து விடுகின்றன. இதனால் தேவையற்ற இராசயனங்களும் சுரக்காமல் இருந்து விடுகின்றன.

நம் மனதின் எண்ணங்களும், உணர்ச்சிகளும் நம்முடைய உடல் ஆரோக்கியத்துக்கு பெரும் பங்கு வகிக்கின்றன.

ஆகவே ஒருவர், தான் ஆரோக்கியத்துடன் இருப்பதாகச் செய்து கொள்ளும் கற்பிதம் அவருக்கு உதவி செய்கிறது.

-நன்மை செய்கிறது; கேடு செய்வதில்லை.

உடல் சம்பந்தப்பட்டவை அனைத்தும் அவருக்குள்ளே நிகழ்வது. நோயும், ஆரோக்கியமும் அவருக்குள்ளேயே ஏற்படுகின்றது.

இதே அணுகுமுறையை மற்றைய நிகழ்வுகளுக்கும் எடுத்துக் கொள்ள முடியுமா?

பலரிடமும் நான் கடன் வாங்கிக் கொண்டு, அதனைத் திரும்பச் செலுத்த முடியாத நிலையில் இருக்கும் நான் சுவரில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு எனக்கு கோடி கோடியாக பணம் கிடைப்பது போலவும், அதனால் கடனையெல்லாம் அடைத்து விட்டு,

நகரத்திலேயே மிகப்பெரிய தொழில் நிறுவனம் ஒன்றைத் தொடங்கி இலாபகரமாகத் தொழில் செய்வதாக கற்பிதம் செய்து கொண்டால்,

- அது சாத்தியம் ஆகுமா?

- அந்த பிரபஞ்ச சக்தி எனது கற்பிதத்தை அங்கிகரித்து, விரும்பிய செல்வத்தை எனக்கு வழங்குமா?

இது சாத்தியமா?

அரசுப் பதவிக்கு பலர் போட்டியிடுகிறார்கள். இருப்பதோ ஒரு பதவி, ஆனால் ஆயிரம் பேர் கற்பிதம் செய்து கொள்கிறார்கள்.

ஆயிரம் பேருக்கும் அது கிடைத்து விடுமா?

மனோ ரீதியான உடல் ரீதியான பிரச்சனைகளுக்குத் தீர்வாக இந்த கற்பிதத்தை நாம் ஏற்றுக் கொள்ளலாம்.

ஆனால், நம்முடைய செயல்களுக்கான தீர்வாக இதனை ஏற்றுக் கொள்ள முடியுமா?

“ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்; எங்களுக்கு பல அற்புதங்கள் நிகழ்ந்துள்ளன.”

- இப்படிச் சிலர் கூறுகிறார்கள்.

“சில கிடைக்கின்றன; சில கிடைக்காமலும் போய் விடுகின்றன.”

- இப்படிச் சிலர் கூறுகின்றனர்.

புற நிகழ்வுகளைப் பொறுத்த அளவில் இத்தகைய கற்பிதங்களின் நடைமுறைச் செயல்பாடுதான் என்ன?

ஓர் உதாரணம். ஒரு புத்தகக் கண்காட்சிக்கு நீங்கள் போகிறீர்கள். நூற்றுக் கணக்கான அரங்குகளில் புத்தகங்களை விற்பனை செய்கிறார்கள். ஆன்மீக நூல்களில் ஆர்வம் கொண்ட நீங்கள் பல அரங்குகளுக்குச் சென்று உங்களுக்கு வேண்டிய புத்தகங்களை வாங்கிக் கொண்டு வெளியே வருகிறீர்கள்.

உங்கள் நண்பர் ஒருவர் அப்போது தான் உள்ளே நுழைகிறார். டிக்ஸ்னரி ஒன்றை வாங்க விரும்பிய அவர். அது எந்த அரங்கில் கிடைக்கும் என உங்களிடம் கேட்கிறார்.

நீங்கள் என்ன கூறுவீர்கள்?

“டிக்ஸ்னரியை ஏதோ ஓர் அரங்கில் பார்த்த மாதிரி நினைவிருக்கிறது. பார்த்தேனா, பார்க்கவில்லையா என்று உறுதியாக கூற முடியாது. ஆனால் ஆன்மீக புத்தகங்கள் எல்லா அரங்கிலும் கிடைக்கின்றன. ஆன்மீக புத்தகங்கள் இல்லாத அரங்குகளே இல்லை.”

–இப்படி தான் நீங்கள் கூறுவீர்கள்.

உண்மை என்னவென்றால்,

எப்படி எல்லா அரங்குகளிலும் ஆன்மீக புத்தகங்கள் இடம் பெற்றிருக்கின்றனவோ அப்படியே எல்லா அரங்குகளிலும் டிக்ஸ்னரியும் இடம் பெற்றிருந்துள்ளன. நீங்கள் அதை சரியாக கவனிக்கவில்லை.

ஏன்?

நமக்கு எதன் மீது அக்கறை உள்ளதோ, அது தான் நமது கவனத்தை ஈர்க்கும்.

நீங்கள் செய்யும் தொழிலில் வெற்றி பெற வேண்டுமானால் உங்களுக்கு என்ன தேவை?

வெற்றி பெறுவோம் என்ற தன்னம்பிக்கையும், ஆர்வமும் வேண்டும்.

தன்னம்பிக்கையும், ஆர்வமும் தான் உங்களுக்கு முயற்சியைக் கொண்டு வரும்.

விடா முயற்சியும் உழைப்புந்தான் நமக்கு வெற்றியைக் கொண்டு வருமே தவிர,

வெற்றி பெற்றது போன்ற கற்பனை வெற்றியை கொண்டு வராது.

வெற்றி கிடைத்தது போன்ற கற்பனை நமக்கு தன்னம்பிக்கை, விடா முயற்சி, உழைப்பு ஆகியவற்றை கொண்டு வருமேயானால், அதனையும் நாம் பயன்படுத்திக் கொள்ளலாம்.

அதற்காக கனவிலே காலத்தை கழித்திடவும் கூடாது.

நீங்கள் சென்னையில் இருக்கிறீர்கள் பெங்களுருக்குக் காரில் செல்வதென முடிவு செய்கிறீர்கள். நீங்களே காரை ஓட்டிச் செல்கிறீர்கள்.

காரை ஓட்ட ஆரம்பித்தவுடன் பெங்களூர் உங்களது காருக்கு முன்னால் வந்து விடாது.

சாலையில் உள்ள போக்குவரத்து வாகனங்கள் தான் உங்கள் காருக்கு முன்னால் எதிர்ப்படும்.

பெங்களூரை நோக்கிப் பயணித்தாலும், இப்போது நீங்கள் எதிர்கொள்ள வேண்டியது உங்களுக்கு எதிராக உள்ள போக்குவரத்தேயாகும்.

அது சிக்கல் மிகுந்த பிரயாணமாகக் கூட இருக்கலாம். ஆனால் பெங்ளூர் செல்ல வேண்டுமென்ற முடிவு, உங்களை அந்தச் சிக்கலான பயணத்தையும் எதிர்கொள்ளும் வல்லமையைக் கொடுகிறது.

அதற்காக, போக்குவரத்தில் சிக்கல் ஏற்படும் போதெல்லாம், பெங்களூரை நாம் மீண்டும் மீண்டும் நினைத்துக் கொண்டே வர வேண்டுமா?

நம் எந்தச் செயலில் ஈடுபடுகிறோமோ, அதனோடு நாம் நம்முடைய முழு மனதோடு ஈடுபட்டுச் செயல்படுகிறோமோ அந்த செயல் தான் சரியான செயலாக அமைந்திருக்கும்.

மன ஈடுபாட்டுடன் நாம் எதனைச் செய்தாலும் அதுதான் யோகா, அது தான் தியானம்.

நாம் எதனைச் செய்தாலும் அதனை தியானமாகச் செய்தால் தான் அந்த செயல் வெற்றிகரமாக அமையும்.

நாம் நெரிசலான போக்குவரத்தின் மத்தியில் பயணிப்பதாக வைத்துக் கொள்வோம். இப்போது நாம் பெங்களூரை நினைத்துக் கொண்டால் என்ன ஆகும்?

அதுவும் நமது தியானத்துக்கு இடையூறாகவே அமையும்.

நம்மை நம்முடைய செயலோடு இணைப்பதற்காக, நாம் எத்தகைய கருத்துகளையோ, தத்துவங்களையோ, அணுகுமுறைகளையோ உதவிக்கு வைத்துக் கொள்ளலாம்.

இவையெல்லாம் பைக்கை ஸ்டார்ட் செய்வதற்காக கிக் ஸ்டார்ட்டரை அழுத்துவதைப் போன்றது தான்.

வண்டி ஸ்டார்ட் ஆன பிறகு கிக் ஸ்டார்டரை அழுத்துவதையும் விட்டுவிட வேண்டும்.

தியானத்துடன் செய்யும் செயல்கள் மட்டுமே வெற்றி பெறும்.

செய்ய வேண்டிய செயல்களை செய்ய வேண்டிய காலத்தில் செய்ய வேண்டிய முறைப்படி செய்வதும்,

அந்த தியானத்தின் ஒரு பகுதியே ஆகும்.

செயல்களைத் தூண்டாத கற்பிதங்கள் அனைத்தும் பகற் கனவே; பலன் இல்லாதவையே.

செயல்களுக்கு தூண்டுதலாக அமைந்து, உதவி செய்யும் கற்பிதங்களை வேண்டுமானால் நாம் நியாயப்படுத்திக் கொள்ளலாம். 

# ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

நமது பகவத் ஐயாவின் மனைவி திருமதி. கோமதி அம்மாள் அவர்கள் உடல் நலக் குறைவால் 17.02.2015 அன்று காலை சுமார் 6.30 மணி அளவில் இயற்கை எய்தினார். இவரது இறுதி சடங்கு திருச்செந்தூர் அருகில் உள்ள ஐயா பிறந்த ஊரான காயாமொழியில் ஐயாவின் தோட்டத்தில் நடைபெற்றது. இதில் பகவத் மிஷன் அன்பர்கள் பலர் கலந்து கொண்டனர். இவரது ஆன்மா சாந்தி அடைய நாம் அனைவரும் எல்லா வல்ல இறைவனை பிரார்த்திப்போமாக.

மனித வாழ்வின் லட்சியம் என்பதே முக்தி என்ற விடுதலையோடு வாழ்வது தான். அது தான் முழுமையான வாழ்வும் கூட. விடுதலை என்பது அனைத்துயிர்களின் பிறப்பியல்பாக இருந்தாலும்கூட. மனித குலம் தன் புற அறிவைக் கொண்டு அகத்தை சீர்படுத்தும் முயற்சியில் விடுதலையோடு முரண்பட்டு அதை தவறவிட்டு அகப்போராட்டத்தில் சிக்கி தவித்துக் கொண்டிருக்கிறது.

இந்த அகப்போராட்டத்தின் சிக்கலை போக்கும் ஞானப்புரிதலை அனைவருக்கும் கொண்டு சேர்க்க வேண்டும் என்பதே நம் பகவத் பாதையின் நோக்கம்.

அந்த நோக்கத்திற்கு ஏற்ப நமது பகவத் பாதையால் பயனடைவோரின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வருகிறது.

மேலும் நமது பகவத் பாதை மின் அஞ்சல் மூலமாக கடல் கடந்து சென்று வெளிநாட்டில் வசிப்பவர்களுக்கும் ஞானத் தெளிவை வழங்குகிறது. அவர்களும் தங்களது மகிழ்ச்சியையும் நன்றியையும் நம்மிடம் தெரிவித்து வருகிறார்கள்.

இந்த ஞானப்புரிதல் ஒன்றே அனைத்து பிரச்சனைகளையும் எதிர்கொள்ளும் தீரத்தை நமக்கு வழங்கி வருகிறது. இதை நாம் மற்றவர்களோடு பகிர்ந்து கொள்வது என்பதே இந்த சமுதாயத்திற்கு நாம் செய்யும் மிகப்பெரிய தொண்டாகும். இத்தொண்டை ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மைய அன்பர்கள் மிகச் சிறப்பாக செய்து வருகிறார்கள்.

ஒவ்வொரு வாரமும் ஞாயிறு மாலை 5.30 மணி முதல் 7 மணி வரை அன்பர்கள் ஒன்று கூடி சத்சங்கத்தில் ஈடுபட்டு வருகிறார்கள். இது ஞானத்தை பெறுவதற்கும், தெளிவில் உறுதி பெறுவதற்கும் மிகவும் பயன் உள்ளதாக இருக்கும். இவ்வாறு ஒவ்வொரு ஊரைச் சேர்ந்த நமது அன்பர்களும் அவரவர் ஊரில் வாரம் ஒருமுறையோ அல்லது மாதம் இருமுறையோ ஆர்முள்ள அன்பர்கள் ஒன்று கூடி ஐயாவின் கருத்துகளை ஆய்ந்து சத்சங்கத்தில் ஈடுபடுவது ஞானத் தெளிவை பெறுவதற்கும், புதிய அன்பர்களோடு தெளிவை பகிர்ந்து கொள்வதற்கும் வாய்ப்பாக அமையும்.

மேலும் நமது சென்னை மையத்தின் தலைவர். திரு. சுகுமார் மற்றும் உறுப்பினர்கள் அனைவரது பெரும் முயற்சியால் சென்னையில் நடைபெற்ற ஹிந்து ஆன்மீக மற்றும் சேவை அமைப்பு **(Hindu Spiritual and Service Foundation) HSSF** நடத்தும் கண்காட்சியில் நமது பகவத் மிஷனும் இடம் பெற்றது. இது எட்டு நாட்கள் நடைபெற்ற இந்த கண்காட்சியில் பார்வையாளர்களாக வந்த பல ஆன்மீக அன்பர்களுக்கு பகவத் ஐயாவின் நூல்களை அறிமுகப்படுத்துவதற்கு ஒரு பெரிய வாய்ப்பாக அமைந்தது. பல பிரமுகர்களும் நமது பகவத் மிஷன் ஸ்டாலை பார்வையிட்டு ஐயாவின் ஞான நூல்களையும் வாங்கிச் சென்றனர். இந்த நிகழ்ச்சி சென்னை மைய அன்பர்களின் பெரும் முயற்சியால் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

இந்த கண்காட்சியில் நமது பகவத் மிஷனும் பங்கு பெறுவதற்கு மிகவும் உறுதுணையாக இருந்த திரு. **C.H.**இரவிச்சந்திரன் அவர்களுக்கு நமது பகவத் மிஷன் சார்பில் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்வோம்.

மேலும் கண்காட்சி நடைபெற்ற அனைத்து நாட்களிலும் இடைவிடாது தொண்டாற்றிய நமது பகவத் மிஷன் அன்பர்கள் திரு. விபாகரன் மற்றும் திரு. பாலசுந்தரம் அவர்களுக்கும் இந்த புத்தகக் கண்காட்சியின் மூலம் எப்படியும் ஆன்மீகத்தில் ஒரு பெரிய மாற்றத்தை உருவாக்க வேண்டும் என்று துடிப்புள்ள இளைஞர்கள் போல் செயல்பட்ட சென்னை மைய அன்பர்கள் திரு. ஞானசம்பந்தம், திரு. பத்மநாபன், திரு. சுந்தரராஜன், திரு. மாரிமுத்து, திரு. தேவராஜ், திரு. சித்தார்த், திரு. சிட்டிபாபு, திரு. ஜெகதீசன், திரு. தியாகராஜன், திரு. ரவிச்சந்திரன், திருமதி. ஹேமலதா, திருமதி. அபிராமி, திரு. கணேசன் மேலும் இதற்காக கோவையில் இருந்து வந்து தொண்டாற்றிய திரு. மாதவன் பாபு ஆகிய அனைவருக்கும் நமது அனைவரின் சார்பிலும் மனமார்ந்த பாராட்டுகளையும், வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஆசிரியர். K.S. ஜீவமணி
**செல் :** 97891-65555

# கவலைகள் அனைத்திற்கும் தீர்வு




இந்நூலில் மூன்றாம் பதிப்பு தற்போது வெளிவந்துள்ளது. இந்நூல் மேலும் சில புதிய கட்டுரைகள் இணைத்து அதிக தரத்துடன் உருவாக்கப்பட்டுள்ளது. இந்நூலில் ஆன்மீகம் சார்ந்த அன்பர்களுக்கு மட்டுமல்லாது இச்சமுதாய மக்கள் அனைவரும் பயன்பெறும் வகையில் அமைந்துள்ளது.

இச்சமுதாய மக்களுக்கு எல்லா வசதிகளும் இருந்தாலும், மனக் குறையுடனும், பிரச்சினைகளுடனும் தான் அமைதியின்றி வாழ்ந்து வருகிறார்கள்.

எல்லாத் துயரங்களையும் கவலைகளையும் ஒட்டு மொத்தமாக வென்று விடும் ஒரு நிலைபாடு இருக்கின்றதா?

உண்மையில் இருக்கவே இருக்கிறது. நம் இரத்தத்தை எடுத்து ஆய்வு செய்த விஞ்ஞானிகள் அதிலே எத்தனையோ விதமான நோய்க்கிருமிகள் இருப்பதைப் பார்த்து ஆச்சரியமடைந்து இருக்கிறார்கள். இதில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது என்று கேட்கிறீர்களா? நமது இரத்தத்தில் பல வகையான நோய்க்கிருமிகள் இருந்தும் அந்த நோயின் தாக்குதலுக்கு நாம் ஆளாகாமல் இருப்பது தான், அந்த ஆச்சரியத்துக்கு காரணம்.

நமது இரத்தத்தில் பலவிதமான நோய்க்கிருமிகள் இடம் பெற்றிருந்தும் அவற்றால் நமக்கு நோய் ஏற்படாமல் இருப்பதன் காரணம் என்ன?

நமது உடலில் உள்ள நோய் எதிர்ப்பு சக்தி தான் காரணம். நமது ஆரோக்கிய சக்தி தான் காரணம். அதைப்போன்று நமக்குள் ஒரு தீர்க்கமான **மனத்தெளிவு** ஏற்பட்டிருக்கும் நிலையில், எத்தகைய துன்பங்களாலும் எத்தகைய துயரங்களாலும் நமக்கு எந்தப் பாதிப்பும் ஏற்படாது.

அப்படி அவை நம்மைத் துவள வைக்காதப் போது, அத்தகைய துயரங்கள் துயரங்களே அல்ல. நம்முடைய அனைத்துத் துயரங்களையும், கவலைகளையும் ஒட்டு மொத்தமாகச் செயலிழக்க வைக்கக் கூடிய அப்படியொரு மனத் தெளிவை நாம் அடைவது எவ்வாறு? அது எப்படி நம் அனைவருக்கும் சாத்தியம் என்பதை இந்நூலைப் படித்துப் புரிந்து கொள்வதன் மூலம் விளங்கிக்கொள்ளலாம்.

**இந்த மனத்தெளிவு என்பது ஆன்மீக உலகில் ஓர் உயர்நிலை ஞானமாக விவரிக்கப்பட்டுள்ளது.** அது ஒருவகையில் உண்மையே; ஆனாலும் இது–

ஒவ்வொரு சராசரி மனிதராலும் புரிந்து கொள்ளக் கூடிய வகையில் எளிமையான உண்மையும் கூட.

**படித்து பாதுகாக்க வேண்டிய நூல் அல்ல இது; படிப்பவர்களையெல்லாம் பாதுகாக்கும் பாதுகாப்பு பெட்டகம் இது.**

– ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.

## FORM IV

| | | |
|---|---|---|
| 1. | Place of publication | : Salem |
| 2. | Periodicity of its publication | : Monthly |
| 3. | Printer's Name | : Jayavel Press |
| | Nationality | : Indian |
| | Address | : 08/11, Gandhi Maidanam, Ammapet, Salem-636003. |
| 4. | Publisher's Name | : V.A.P. Sharavanan |
| | Nationality | : Indian |
| | Address | : 28, Ramalinga Samy Street, Ammapet, Salem-636003. |
| 5. | Editor's Name | : K. S. Jeevamani |
| | Nationality | : Indian |
| | Address | : 31, Ramalinga Samy Street, Ammapet, Salem-636003. |

6. Names and address of individuals who own the newspaper and partners or shareholders holding More than one percent of the total capital.

I **V.A.P. SHARAVANAN,** Sri Bagavath Mission 31, Ramalingasamy Street, Ammapet, Salem - 3 hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Date: 15.02.2015

**V.A.P. Sharavanan**
Signature of Publisher

# ஏற்காடு ஞானமுகாம்

சேலத்தில் ஐயாவின் ஞானமுகாம் சென்ற ஆண்டைபோலவே மே மாதம் கோடை வெப்பத்தின் தாக்கத்தை தவிர்க்க இயற்கைச் சூழல் மிகுந்த ஏற்காடு மலை பிரதேசத்தில் அமைந்துள்ள **House of Peace** - என்ற அமைதி இல்லத்தில் நடைபெற ஏற்பாடு செய்துள்ளோம்.

இது கோடைகாலத்திற்கு ஏற்ற சுற்றுலா தலமாக அமைந்திருப்பதால் குடும்பத்துடன் பங்குபெறலாம்.

ஐயாவின் நூல்கள் பல படித்திருந்தாலும் நடைமுறையில் நமக்குள் எழும் வினாக்களுக்கு ஐயாவுடன் தங்கியிருந்து கலந்துரையாடலில் ஈடுபடும்போது மட்டுமே நமக்கு விடை கிடைப்பதோடு தெளிவில் உறுதியும் ஏற்படும்.

உண்மை ஒன்றாயினும் அதை பல கோணங்களில் அணுகி தெளிவு பெறுவதற்கு அன்பர்களுடன் ஏற்படும் கலந்துரையாடல் பெரிதும் உதவியாக இருக்கும்.

இதுவரை ஞானமுகாமில் கலந்து கொள்ளாத புதிய அன்பர்கள் இந்த நான்கு நாள் ஞானமுகாமில் கலந்து கொள்வது, ஞானத் தெளிவு பெறுவதற்கான சரியான வாய்ப்பாக அமையும்.

நாள் : **30.04.2015 வியாழன் மாலை 4 மணி முதல்**
**03.05.2015 ஞாயிறு மாலை 3 மணி வரை**
இடம்: **House of Peace ( Glass House) அமைதி இல்லம்,** ஏற்காடு, சேலம்.

ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கான தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது. தனி அறைகள் 10 மட்டும் உள்ளதால் குடும்பத்துடன் வருபவர்களுக்கு மட்டும் தனி அறை கொடுக்கப்படும்.

உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு ரூ. 2500/- மட்டும்.

80 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் ஏப்ரல் மாதம் 15-ம் தேதிக்குள் முன்பதிவு செய்திட வேண்டுகிறோம். தங்கள் பெயர், முகவரி, தொலைபேசி, இ-மெயில் ஆகிய தகவல்கள் எழுதி அனுப்பவும்.

முன்பதிவு செய்யும் வழிகள்:

**1) M.O 2) D.D. 3) Direct payment 4) Online Payment**

1. ஸ்ரீ பகவத் மிஷன், 31 ராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம் – 636003.
2. வரைவோலை (D.D.) அனுப்புபவர்கள் : **A/c. Sri Bagavath Mission** என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.
3. நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் : **Sri Bagavath Mission, HDFC A/c No. : 15907620000075 NEFT IFSC: HDFC 001590** என்ற வங்கி கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.
4. **Credit Card or Debit Card** மூலம் **www.pravaagam.org** என்ற இணைதளத்தில் முன்பதிவு செய்யலாம்.
   மேலும் விபரங்களுக்கு : 9994205880, 9789165555, 9443290559

அனைவரும் வருக! தெளிவு பெறுக!

## சத்சங்கம்

சென்னை ஸ்ரீ பகவத் மிஷன் மையத்தில் ஒவ்வொரு வாரமும் ஞாயிற்றுக்கிழமை மாலை 5-30 மணி முதல் 7-00 மணி வரை ஐயாவின் கருத்துகளில் ஈடுபாடு கொண்ட அன்பர்கள் கூடி சத்சங்கம் நடைபெற்றுக் கொண்டு வருகிறது . வாய்ப்புள்ள அன்பர்கள் கலந்து கொண்டு பயனடைய அழைக்கிறோம்.

இப்படிக்கு
ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்,
23/10, பழைய பரோடா வங்கி தெரு, செக்ரட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை- 600053.
செல்: 9884097438, 9381019479, 9444756744

ஐயாவின் அனைத்து நூல்களும் இங்கு கிடைக்கும்.



நடிகர் திரு. எஸ்.வி. சேகர் அவர்கள் நமது அரங்கத்திற்கு வருகை புரிந்து புத்தகம் வாங்கிய போது...




ஆடிட்டர் திரு. குருமூர்த்தியுடன் நமது பகவத் மிஷன் சென்னை மையத் தலைவர் திரு. சுகுமார் அவர்கள்
















ஹிந்து ஆன்மீகம் மற்றும் சேவை அமைப்பு (**Hindu Spiritual and Service Foundation) HSSF** சென்னையில் நடத்திய கண்காட்சியில் பங்குபெற்ற நமது ஸ்ரீ பகவத் மிஷன் அரங்கத்தில் எடுத்த சில புகைப் படங்கள்



## நிராயுதபாணி

ஜென் கதை

இளைஞன் ஒருவனுக்கு ஞானத் தாகம் ஏற்பட்டது. எப்படியாவது ஞானம் அடைய வேண்டும் என்ற தீராத ஆவல். ஆன்மீகவாதிகள் என்று யார் இருந்தாலும் அவர்களிடம் சென்று ஞானமடைவதற்கான வழிகளைக் கேட்டு அலைந்தான்.

ஒவ்வொரு ஆன்மீகவாதியும் தமக்கு தெரிந்ததை,அறிந்ததை வைத்து அவனுக்கு பிரசங்கம் செய்தார்கள்.

ஞானம் என்பது "அறிவுச் செருக்கு அழிந்த நிலையில் மட்டுமே கிடைக்க வாய்ப்புள்ளது" என்றார் ஒருவர்.

''இமயமலையில் உள்ள கடுமையான பனிமலைகளுக்கு இடையில் உடம்பில் பொட்டுத் துணிக்கூட இல்லாமல் முனிவர்கள் போல் தவம் செய்தால் மட்டுமே கிடைக்கும்" என்றார் மற்றொருவர்.

''மூன்று வருடம் குடும்பத்தை விட்டு மூச்சை கவனிக்கும் வாசியோகத்தால் மட்டுமே ஞானம் கிடைக்கும்" என்றார் இன்னுமொருவர்.

ஞானத்திற்கு "குண்டலினி தவத்தை விட்டால் வேறு வழியே கிடையாது" என்றார் மற்றொருவர்.

இராஜயோகம், கர்மயோகம், ஞானயோகம், பிராணயாமம், சாட்சியாக பார்த்தல், சமாதி நிலை என பலவகையான வழிமுறைகளை கூறினார்கள்.

எந்த வழி முறையும் இளைஞனுக்கு ஞானத்தைக் கொடுக்கவில்லை. வேறு எந்த வழியும் தெரியாமல் மிகவும் சோர்வடைந்தான். முதியவர் ஒருவர் தான், ஒரு எளிய ஞானியை சந்தித்ததாகவும் அவர் மூலம் தான் தெளிவு பெற்றதாகவும் கூறினார். அவர் ஒரு குடிலில் வசிப்பதாகவும் அவரை சந்தித்து ஞானத் தெளிவை பெற்றுக் கொள்ளலாமே" என்றார். இளைஞனும் அந்த ஞானியை அவரது குடிலில் சந்திக்க சென்றான்.

அந்த ஞானியை சந்தித்து "ஞானம் என்றால் என்ன?" என்று கேட்டான். ஞானி முகத்தில் எந்தச் சலனமுமின்றி அமர்ந்திருந்தார்.

"அறிவு செருக்கு அழிந்த நிலையா?, பனிமலையில் நிர்வாணமாக முனிவர்கள் போல் தவம் செய்வதா?, மூச்சை கவனிப்பதா? இராஜயோகமா? கர்மா யோகமா? வாசியோகமா? காட்சியாக பார்த்தாலா? சமாதி நிலையா? குண்டலினி தவமா? என நான் கற்றவைகளில் எவை தான், எனக்கு ஞானத்தைக் கொடுக்கும்?" என்றான் இளைஞன்.

ஞானி எதுவுமே நடக்காதது போல் தன் வேலையை கவனிக்கத் தொடங்கினார். இளைஞனும் இவரிடமிருந்து எப்படியாவது ஞானத்தைப் பெற்றுவிட வேண்டும் என்று அவர் பின்னாலே சென்றான். ஞானி தன் வேலையை முடித்து, உணவிற்குப் பிறகு ஓய்வு எடுத்தார்.

இளைஞனும் அவரை விடுவதாக இல்லை. அவர் எங்கு சென்றாலும் அவரை பின் தொடர்ந்து சென்றான். ஞானியை சந்திக்க வந்த மற்றவர்கள் கேட்ட கேள்விகளுக்கு பதிலைக் கூறினாரே தவிர, இளைஞனுக்கு எந்தப் பதிலும் கூறவில்லை. தம் பணிகளை வழக்கம் போல் செய்யத் தொடங்கினார். ஆனாலும் இளைஞன் அங்கே இருப்பதற்கும், தங்குவதற்கும் தேவையானவற்றை செய்வதில் முழு கவனத்துடன் செயல்பட்டார்.

இரண்டு மூன்று நாட்கள் சென்றன. இளைஞன் ஞானியின் செயலில் ஒரு நேர்த்தியையும், ஒழுங்கையும் கண்டான். மூன்றாம் நாள் இளைஞனிடம் மிகவும் சலிப்பு ஏற்பட்டது. இவரிடம் இனி மேல் ஞானத்தை பற்றி கேட்டு எந்த பிரயோஜனமும் இல்லை என்று மனமுடைந்த நிலையில் வீட்டிற்கு செல்லத் திரும்பினான்.

இளைஞன் வீட்டிற்கு செல்வதைப் பார்த்த ஞானி, அவன் பின்னாடி சென்று "ஞானத்தை பற்றி என்னிடம் கேட்டு எந்த பிரயோஜனமும் இல்லை என்ற மனமுடைந்த நிலையில் திரும்புகிறாய் இல்லையா? அது தான் ஞானம் " என்றார்.

"ஐயா கொஞ்சம் விளக்கமாக கூறுங்கள்" என்றான்.

"நீ மனதளவில் தோல்வி அடைந்து, மனதிற்கு வேறு எந்த வழிமுறையும் தெரியாமல், எந்த மனமுயற்சியும் நமக்கு உதவாது என்பதை உணர்ந்து, மனதளவில் இனிமேல் செய்வதற்கு எதுவும் இல்லை, அடைவதற்கென்று ஒன்றுமில்லை என்ற மனதின் இயலாமையை நீ புரிந்து கொள்வதே ஞானம்" என்றார் ஞானி.

"மனதின் இயலாமையை புரிந்து கொள்வது ஒன்று தான் ஞானமா? " என்றான் இளைஞன்.

ஞானி சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டு, பிறகு "மனதளவில் நீ ஒரு நிராயுதபாணி. அங்கு உனக்கு வேலையே கிடையாது என்பதைப் புரிந்து கொள்வதே ஞானம்" என்று கூறினார். அந்த நொடிப் பொழுதில் இளைஞனுக்கு ஞானத் தெளிவு ஏற்பட்டது.

**"மனதளவில் நாம் நிராயுதபாணியே".**



ஜென் கதை - "நிராயுதபாணி"

**Registration Number of the News Paper TNTAM/2014/57698**

*If undelivered please return to:*




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet, Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555